# பகவத் பாதை

**BAGAVATH PATHAI**

• Volume : 1 • Issue : 2 | தமிழ் மாத இதழ் | • April 2014 • Annual Subscription Rs. 100/-

• மலர் : 1 • இதழ் : 2 | • ஏப்ரல் 2014 • வருடச் சந்தா ரூ. 100/-

## தற்சூழல்

**- ஸ்ரீ பகவத்**



அகத்தைப் பொறுத்த அளவில் நமது உணர்வுகளை எவ்வாறு எதிர்கொள்வது என்பதில்தான் நமக்குப் பிரச்சினை.

அதை எதிர்கொள்ள, அறிவு தேவை இல்லை.

அங்கு சுதந்திரம் மட்டுமே தேவை.

- ஸ்ரீ பகவத்



ஒரு கரும்பலகை இருக்கிறது. அந்தக் கரும்பலகையில் கருப்பு மையினால் உங்கள் பெயரை எழுதுகிறோம்.

அதைப் படிக்க முடியுமா?

கருப்பு மையை உபயோகிக்காமல் வெள்ளை சாக்பீசால் கரும்பலகையில் உங்கள் பெயரை எழுதுகிறோம்.

எதைச் சுலபமாகப் படிக்க முடியும்?

கரும்பலகையில் கருப்பு மையால் எழுதப்பட்ட எழுத்தைத் தெளிவாகப் படிக்க முடியாது.

வெள்ளை எழுத்துகளைச் சுலபமாகப் படிக்க முடியும்.

கருப்பையும் வெள்ளையையும் சுலபமாகப் பிரிக்க முடியும். கருப்பையும், கருப்பையும் எப்படிப் பிரித்துப் பார்ப்பது?

சாப்பாட்டு மேஜையில் உங்களுக்கு சாப்பாடு பரிமாறப்பட்டுள்ளது. உங்களையும் சாப்பாட்டையும் பிரித்துப் பார்த்தால் தான் நீங்கள் சாப்பாட்டோடு தொடர்பு கொள்ள முடியும்.

உங்களையும், சாப்பாட்டையும் நீங்கள் தனித்தனியாகப் பிரித்துப் புரிந்து கொள்ளவேண்டும். அப்படிப் பிரித்துப் புரிந்து கொண்டால் மட்டுமே உங்களுக்குப் பரிமாறப்பட்ட உணவை நீங்கள் சாப்பிட முடியும்.

உங்களையும், நீங்கள் தொடர்புகொள்ளும் பொருளையும் உங்களுக்குப் பிரித்துக்காட்டுவது எது?

நினைவுதான் இப்படிப் பிரித்துக்காட்டுகிறது. Thought Process தான் இப்படிப் பிரித்துக்காட்டுகிறது. அதன்மூலம் என்னை நான் என்று புரிந்துகொள்கிறேன். நான் தொடர்பு கொள்ளும் பொருளை உணவு என்று புரிந்து கொள்கிறேன்.

நம் சிந்தனை நமக்கு உதவாவிடில், நாம் எதனையும் பிரித்துப் பார்த்துப் புரிந்து கொள்ளமுடியாது.

நம் சிந்தனை, எப்போதும் நம்மையும் நம்மோடு தொடர்பு கொள்ளும் பொருட்களையும் சூழ்நிலையையும் பிரித்துக்காட்டுகிறது.

நமக்கு கனவு என்றால் என்ன என்பது தெரியும். கனவு என்பது என்ன?

நாம் தூங்கும் போதும் நமக்கு சிந்தனை இயக்கம் உள்ளது. தூங்கும் போது நமக்கு ஏற்படும் சிந்தனைதான், ‘கனவு’ என்று அழைக்கப்படுகிறது.

நாம் விழித்துக் கொண்டிருக்கும்போது நமக்கு ஏற்படும் சிந்தனையை, நனவுநிலை என்று கூறுகிறோம்.

அதுபோல் நாம் தூங்கும்போது நமக்கு ஏற்படும் சிந்தனையை, கனவுநிலை என்று கூறுகிறோம்.

கனவு என்பதும் நமது சிந்தனையே.

நமக்கு ஏற்படும் கனவில் நாம் மட்டுமா இருக்கிறோம்?

நமது கனவில், ஓர் உலகமே இருக்கிறது. அங்கு நாம் இருக்கிறோம்; நாம் தொடர்பு கொள்ளும் நபர்கள் இருக்கிறார்கள்; நாம் தொடர்புகொள்ளும் சம்பவங்களும் சூழ்நிலைகளும் இருக்கின்றன.

ஒரு சிந்தனையின் ஆயுள் எவ்வளவு நேரம்? ஒரு சிந்தனையின் ஆயுள் ஒன்று அல்லது இரண்டு வினாடிகள் இருக்குமா?

வினாடி ஒன்றுக்கு, முப்பதுக்கும் மேற்பட்ட சிந்தனைகள் வந்து செல்வதாகக் கணித்துள்ளனர்.

வினாடி ஒன்றுக்கு பல சிந்தனைகள் ஏற்படுகின்றன. அந்த சிந்தனைகள் தொடர்ந்து ஏற்படும்போது, அவைகளில் பல ஒரே தன்மையானவையாக இருப்பதால்

ஒரே சிந்தனை, தொடர்ந்து நீடித்திருப்பதுபோல் தோன்றுகின்றது.

ஒரு மலரைப் பார்த்து, நீங்கள் அதனை மலர் என்று புரிந்து கொள்ளும்போது

அதனை மலர் என்று அடையாளம் காட்டும் சிந்தனைகள்

அடுக்கடுக்காக ஏற்படுகின்றன.

அவை ஒரு வினாடிக்கு முப்பதுக்கும் அதிகம் என்று கூறப்படுகின்றன.

அவற்றின் மூலமே நாம் எந்த ஒன்றையும், பிரித்துத் தனிமைப்படுத்திப் புரிந்து கொள்கிறோம்.

எந்த ஒரு சிந்தனையும் இரண்டு பிரிவாக அமைந்துதான் விளக்கமடைகின்றது.

அந்த சிந்தனைதான்

காண்பவனாகிய நம்மையும்

காணப்படும் பொருளாகிய மலரையும் காட்டுகின்றது.

நமது கனவை எடுத்துக்கொண்டாலும் இப்படித்தான். நம் கனவின் ஒவ்வொரு காட்சியிலும் நாம் இருப்போம். நாம் சில நபர்களுடனோ அல்லது சம்பவங்களுடனோ தொடர்பு கொண்டிருப்போம்.

இந்த இரட்டை அம்சம் இல்லாத சிந்தனை எதுவும் கிடையாது. இவை இரண்டும் சேர்ந்து ஒரே ஒரு சிந்தனைதான். காண்பவனை உருவாக்க ஒரு சிந்தனையும், காணப்படும் பொருளை உருவாக்க இன்னுமொரு சிந்தனையும் கிடையாது. ஒரே ஒரு சிந்தனைதான் இரண்டையும் உருவாக்குகின்றது.

மலரைப் பார்க்கும் போது எனக்கு மலர் மட்டுந்தானே தெரிகிறது? காண்பவனாகிய நான் தெரியவில்லையே?

நீங்கள் உங்கள் நண்பரைப் பார்ப்பதாக வைத்துக்கொள்வோம். அவரைப் பார்க்கும் போது அவர் மட்டுந்தான் கவனத்துக்கு வருகிறார். அவரைப் பார்க்கும் **நாம்** கவனத்துக்கு வரவில்லை.

நாம் நம்மைப் பார்க்கவில்லை. நண்பரைத்தான் பார்க்கிறோம். ஆனால் அவரை அவராக மட்டும் பார்க்கவில்லை. நம்முடைய நண்பராகப் பார்க்கிறோம். அவரை மட்டுமே நாம் பார்த்த போதிலும், 'என்னுடைய நண்பர்' என்ற கோணத்திலேயே அவரைப் பார்க்கின்றோம்.

அவரை நண்பராகப் பார்க்கும் அந்நிலையிலேயே அவருக்கு நண்பனாக நம்மையும் பாவித்துக்கொள்கிறோம்.

மலரைப் பார்த்த நிலையில், 'மலரைப் பார்ப்பவன்' என்ற அம்சமும் அதனுடன் சேர்ந்தே இருக்கிறது.

நம்முடைய கனவில், 'நான்' சம்பந்தப்படாத ஏதாவது ஒரு காட்சி இருக்க முடியுமா?

நான் எனும் அம்சத்தையும் சம்பவம் என்னும் அம்சத்தையும் பிரிக்க முடியாத ஒரே அனுபவமாகவே

நமது கனவின் ஒவ்வொரு காட்சியும் அமைந்துள்ளது.

இதுபோல் நமது நனவுநிலையில் ஏற்படும் சிந்தனையின் மூலம் புரிந்து கொள்வது ஓர் அனுபவம். அதுபோல் நம்மை நான் என்று புரிந்து கொள்வதும் ஓர் அனுபவமே.

மலரைப் பார்க்கும் தனி அனுபவமோ, அனுபவிப்பவனாகிய நம்மைப் பார்க்கும் ஒரு தனி அனுபவமோ நமக்குக் கிடையாது.

இவை இரண்டும் கூட்டாகச் சேர்ந்து ஏற்படும் ஒரே ஒரு அனுபவம் மட்டுமே உள்ளது.

மலரைப் பார்ப்பவன், மரத்தைப் பார்ப்பவன், நண்பரைப் பார்ப்பவன், கோபப்படுபவன், வருத்தப்படுபவன்

- இப்படி இரண்டும் சேர்ந்த ஒரே ஒரு அனுபவம் மட்டுமே உள்ளது.

ஒவ்வொரு அனுபவமும் ஒவ்வொரு விதமான அனுபவிப்பவனாக இருக்கிறது.

மலரைப் பார்ப்பவனில்,

மலரும் இருக்கிறது,

மலரைப் பார்ப்பவனும் இருக்கிறான்.

வருத்தப்படுபவனில், வருத்தம் என்ற அனுபவமும் இருக்கிறது;

அந்த வருத்தத்தை அனுபவிக்கும் அனுபவிப்பவனும் இருக்கிறான்.

இரண்டையும் உள்ளடக்கிய ஒரே ஒரு அனுபவம் மட்டுமே உள்ளது.

நாம் நம்முடைய பல செயல்களிலும் ஈடுபடவேண்டியது உள்ளது.

நம்மையும் நமது வீட்டையும் பிரித்துப் பார்த்தால்தான்

நாம் நமது வீட்டினுள் நுழையவோ வீட்டுக்குள்ளிருந்து வெளியே வருவதோ சாத்தியம்.

இப்படிப் பிரித்துப் பார்த்தே நாம் நம்முடைய வாழ்வை வெகு காலமாக வாழ்ந்து வந்திருக்கின்றோம்.

அந்தப் பழக்கத்தை, நாம் நம்முடைய மனதினுள்ளும் கொண்டுசெல்ல ஆரம்பித்துவிட்டோம். நம்முடைய அக உலகத்துக்குக் கொண்டுசெல்ல ஆரம்பித்துவிட்டோம்.

இந்தப் பிரிவினையை நாம் நமது அகத்திற்குக் கொண்டு வரும்போது என்ன ஆகிறது?

நான் என்று ஒருவர் நிரந்தரமாக இருப்பதைப்போலவும்

அவருக்கு இன்பமும் துன்பமும் மாறி மாறி வந்து கொண்டிருப்பது போலவும் தோன்றுகின்றது.

எனக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது; எனக்கு வருத்தம் ஏற்படுகிறது; எனக்குக் கோபம் ஏற்படுகிறது; எனக்கு பயம் ஏற்படுகிறது

- இப்படி நாம் புரிந்து கொள்கிறோம்.

எனது மகிழ்ச்சி நீடித்திருக்கவேண்டும்; எனது வருத்தம் போய்விடவேண்டும்; எனது கோபம் தவறானது; எனக்கு பயம் ஏற்படக்கூடாது

- இப்படி நாம் அவற்றை நிர்வாகம் செய்யப் புறப்பட்டுவிடுகிறோம்.

நம்முடைய சிந்தனையும் அதனால் ஏற்படும் உணர்வுகளும்

ஒவ்வொரு கணந்தோறும் புதிது புதிதாகவே வந்து கொண்டிருக்கின்றன.

அவை அனைத்தும் தாமாக ஏற்பட்டுத் தாமாகவே மறைந்து விடுகின்றன.

அவற்றை நாம் அப்புறப்படுத்தும் வரை அவை காத்திருப்பதில்லை. அவற்றின் ஆயுள் ஒரு வினாடியில் முப்பதில் ஒரு பங்கு மட்டுமே.

அவற்றைச் சீரமைக்கும் பொறுப்பை நாம் எடுத்துக் கொள்ளும் போது

நம்மை நாமே இரண்டாகப் பிரித்துக் கொண்டு நமக்கு நாமே போராடி விடுகின்றோம்.

ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களும் ஒன்றையொன்று எதிர்த்துப் போராடும்போது என்ன ஏற்படுகிறது?

இந்நிலையில் நமக்குள்ளே ஒரு தற்சுழல் ஏற்படுகிறது.

இது இன்பத்தை தக்கவைத்துக் கொள்ளும் சுழலாகவும் இருக்கலாம்.

அல்லது துன்பத்தை அப்புறப்படுத்த முயலும் சுழலாகவும் இருக்கலாம்.

இந்தத் தேவையற்ற தற்சுழல்தான் நமது அன்றாட வாழ்க்கையாக ஆகிவிட்டது.

இந்தத் தற்சுழலிலிருந்து விடுபடுவது எவ்வாறு?

இந்தத் தற்சுழல் தேவையற்ற ஒன்று என்பதை முதலில் புரிந்து கொள்ளவேண்டும். அனுபவங்களை நிர்வகிக்கும் தவறான முயற்சியினால் ஏற்பட்ட தேவையற்ற தற்சுழல் என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்.

அதன் பின்பு என்ன செய்யவேண்டும்?

அந்த புரிதலோடு நாம் செய்யவேண்டிய பணி முடிந்துவிட்டது.

அதன் பிறகு

அகத்தைப் பொறுத்த அளவில்

அது எப்படிச் செயல்பட்டாலும் ஒன்று தான்.

அது அனுபவமாக இருந்தாலும் சரி,

அனுபவத்தைச் சீரமைக்கும் போராட்டமாக இருந்தாலும் சரி,

- தற்சுழலாக இருந்தாலும் சரி,

அவை அவையாக வந்துவிட்டுப்போகட்டும்.

அவை அவையாக வந்துவிட்டுப் போவதற்கு

நமதளவில் நாம் என்ன செய்ய வேண்டும்?

நாம் எந்தக் கருத்தைப் புரிந்து கொண்டாலும்

நம்மில் ஒரு பகுதி அதனைச் செயல்படுத்துவதற்கு அக்கறை காட்டுகிறது.

அதுதான் அனுபவிப்பவன் அல்லது நான் என்னும் பகுதி.

அனுபவங்களுக்கு எப்படி சுதந்திரம் கொடுக்கிறோமோ

அப்படி இந்த அனுபவிப்பவன் என்னும் 'நான்' அம்சத்துக்கும் சுதந்திரம் வழங்குவதன் மூலமே அகச் சுதந்திரம் முழுமையாகிறது.

'நான்' எனும் நமது அக உணர்வுக்கும் முழுச்சுதந்திரம் வழங்கும்போது

அங்கு ஓர் அகச்சரணாகதி அல்லது Submission ஏற்படுகிறது.

அது இந்த தற்சுழலையும் விடுவிக்கிறது.

அகத்தைப் பொறுத்த அளவில் சுதந்திரம் மட்டுமே செயல்முறை வேதாந்தம் அல்லது செயல்முறை உண்மை ஆகும்.

கட்டுப்பாடுகள் அனைத்தும் உண்மைக்குப் புறம்பானவை.

புறச்செயல்களைப் பொறுத்த அளவில்

சுதந்திரம் என்பது தவறானது; ஆபத்தானது; உண்மைக்கும் தர்மத்துக்கும் விரோதமானது.

நமது செயல்கள் அனைத்தையும் செயல்படுத்த ஒரு நிர்வாகி தேவை; ஒரு கர்த்தா தேவை; ஒரு செயல்படுபவன் தேவை.

நான் என்னும் ஒரு கர்த்தா, நமது செயல்கள் அனைத்துக்கும் தேவை.

ஆனால் நமது அனுபவங்களுக்கு கர்த்தா தேவையில்லை; நிர்வாகி தேவை இல்லை.

அனுபவிப்பவன் என்பவனும் ஓர் அனுபவமே; அவன் கர்த்தா அல்ல.

அவன் நிர்வாகியாக - செயல்படுபவனாக, பொறுப்பெடுக்கும் போதுதான்

தற்சுழல் உருவாகின்றது; சுய முரண்பாடு உருவாகின்றது.

அகத்தைப் பொறுத்த அளவில் அனைத்து அனுபவங்களும் நிழல்களே; அனைத்தும் Reactions மட்டுமே.

- அது அனுபவமாக இருந்தாலும் சரி; அனுபவிப்பவனாக இருந்தாலும் சரி.

புறம் என்பது நிழலல்ல. அது நிஜம். அங்கு நம்பிக்கைகளும், பொறுப்பற்ற தன்மையும் நாசத்தையே ஏற்படுத்தும்.

அறிவுதான் புறத்தை ஆட்சி செய்யவேண்டும். அறிவுக்குப் பொருந்தாதவற்றை அப்புறப்படுத்தவேண்டும்.

அனைத்து செயல்பாடுகளையும் அறிவுடைமைக்குள் கொண்டுவரவேண்டும்; தர்ம நியாயங்களுக்குள் கொண்டுவரவேண்டும்.

புறச்செயல்களில் பெரும்பாலும் எவருக்கும் குழப்பம் ஏற்படுவதில்லை. நம்மில் பெரும்பாலோர் நற்பண்புகளுடனும் நல்லொழுக்கத்துடனும்தான் இருந்து வருகின்றனர்.

அகத்தைப் பொறுத்த அளவில் நமது உணர்வுகளை எவ்வாறு எதிர்கொள்வது என்பதில்தான் நமக்குப் பிரச்சினை.

அதை எதிர்கொள்ள, அறிவு தேவை இல்லை.

அங்கு சுதந்திரம் மட்டுமே தேவை.

அங்கு அனைத்துக்கும் தேவை சுதந்திரம் மட்டுமே.

அங்கு ஏற்படுவது அனுபவமாயினும் சரி, அனுபவிப்பவனாயினும் சரி,

அனைத்தையும் சுதந்திரத்துக்குட்படுத்தினால் போதுமானது.

அங்கு எவற்றுக்கும் உயர்வோ, தாழ்வோ, இகழ்வோ, சிறப்போ கொடுத்தோமானால்

சுதந்திரம் அங்கு சாத்தியமில்லை.

அனைத்தையும் சமமாக ஏற்கும் போதுதான் சுதந்திரம் சாத்தியமானதாகும்.

அங்கு அனைத்தும் சரியானதே; அனைத்தும் சமமானதே. எட்டும் இரண்டும் பத்து என்றாலும் சரிதான்; பதினைந்து என்றாலும் சரிதான். தீயதைப் பார்த்து நல்லது என்றாலும் சரிதான்; நல்லதைப் பார்த்து தீயது என்றாலும் சரிதான்.

அனைத்தையும் சரியென்று ஏற்றுக்கொள்ளும்போதுதான் சுதந்திரம் சாத்தியமாகிறது.

அனுபவங்கள் அனைத்திற்கும் எப்படி சுதந்திரம் கொடுக்கிறோமோ அப்படியே அனுபவிப்பவனுக்கும் சுதந்திரம் கொடுத்து விடவேண்டும்.

அவன் தன்னை அனுபவிப்பவனாக எடுத்துக்கொண்டாலும் சரி, புறச்செயல்களில் செயல்படும் செயல்படுபவனாக எடுத்துக்கொண்டாலும் சரி அவனுக்கும் சேர்த்து சுதந்திரம் வழங்குவதே முறை ஆகும்.

நான் என்பது எப்போதும் அகத்தையே சார்ந்துள்ளது. அது அகத்தைச் சீரமைக்கும் வேலையை எடுத்துக்கொண்டாலும் சரி அல்லது புறத்தை நிர்வகிக்கும் வேலையை எடுத்துக் கொண்டாலும் சரி,

'நான்' எனும் அது, எப்போதும் அக உணர்வாக மட்டுமே உள்ளது.

அகத்தின் ஆட்சிமொழி சுதந்திரம் மட்டுமே. புறத்தின் ஆட்சிமொழி தான் கட்டுப்பாடு மட்டுமாக உள்ளது.

நான் என்பது எந்தத் தன்மையில் செயல்பாட்டாலும் அதற்கு சுதந்திரம் வழங்கப்படவேண்டும்.

சுதந்திரம் என்றால் என்ன?

அது எப்படி வேண்டுமானாலும் இருந்துகொள்ளலாம் என்பதுதான் சுதந்திரம்.

**King can do no wrong** - 'அரசனால் குற்றம் புரியமுடியாது' என்ற சட்டமொழி ஒன்று உண்டு.

' அரசனை சட்டத்தால் கட்டுப்படுத்தமுடியாது என்பதை இவ்வாறு நயம்படக் கூறுவதுண்டு.

'நான்' என்பதும் தவறுகளுக்கு அப்பாற்பட்ட ஒன்றாக எடுத்துக்கொள்ளும் போதுதான்

அதற்கு சுதந்திரம் வழங்கமுடியும்.

சுதந்திரத்தைப் பெற்ற 'நான்' என்ன ஆகும்?

விடுதலை அடைந்துவிடும்.



## ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இந்தி புத்தகம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் 'ஞான விடுதலை' மற்றும் 'ஞான மலர்வு' ஆகிய இரு புத்தகங்களும் தற்போது இந்தி (Hindi) மொழியில் வெளியிடப்பட்டுள்ளது. இதுவரை இவ்விரு புத்தகங்களும் PDF File ஆக இணைய தளத்திலிருந்து இலவசமாக பதிவிறக்கம் (Download) செய்யும் வசதி மட்டும் இருந்தது.

இப்போது புத்தக வடிவில் வெளியிடப்பட்டுள்ளன. இப்புத்தகங்கள் வட இந்தியர்களுக்கும் ஞானத்தெளிவை கொடுக்கக்கூடியவைகளாக அமைந்துள்ளன. எனவே உங்களுக்கு தெரிந்த வட இந்திய நண்பர்களுக்கு இப்புத்தகங்களை அறிமுகம் செய்து அவர்களும் பயன்பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இத்தருணத்தில் இவ்விரு புத்தகங்களையும் இந்தி மொழிமாற்றம் செய்து உதவிய Mrs.மரகதவல்லி, M.A., M.A., M.Ed., M.Phil., Ex. Principal Sri Vidya Mandir அவர்களுக்கும் புத்தக வடிவில் வெளியிட நன்கொடை வழங்கிய நமது நண்பர் திரு. புலியூர்வுடையான் அவர்களுக்கும் பாதையில் பயணிக்கும் நம் அனைவரின் சார்பிலும் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்

### ஸ்ரீ பகவத் மிஷன் செயல்களை அறிந்துகொள்ள மற்றும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நூல்களை நேரில் பெற...

★ ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-600053.
செல் : 9884097438, 9381019479, 9444756744

★ ஸ்ரீ பகவத் மிஷன், திருப்பூர் மையம்,
ஸ்ரீ பாலகுமரன் நிட்ஸ்,
40, தட்டான் தோட்டம், 4-வது தெரு,
பல்லடம் ரோடு, திருப்பூர்-4.
செல் : 9944044988, 9442215248, 9865623709

★ ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மையம்,
270, பொத்தனூர் ரோடு, முருகன் தியேட்டர் எதிரில்,
பரமத்தி வேலூர், நாமக்கல் Dt.
செல் : 9360579181, 9360110755, 9787253751

★ ஸ்ரீ பகவத் மிஷன், P. ராஜவேலன், பூரணி கேஸ் ஏஜன்ஸி,
மாரியம்மன் கோவில் அருகில், ஆக்கூர் (Po.)
மயிலாடுதுறை வழி, நாகப்பட்டிணம் Dt. Pin : 609 801.
செல் : 9150405092

**தபாலில் பெற :** ★ ஸ்ரீ பகவத் மிஷன், 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம்-636 003.
செல் : 9443290559, 97891-65555, 99942-05880

## ?கேள்வி பதில்

கேள்வி : நான் ஒரு பெண்மணி. நான் எல்லோரிடமும் எப்போதும் அன்பாக இருக்கவேண்டும் என்பதற்காக பக்தியில் ஆழ்ந்து செல்வதுண்டு; இறைநாமங்களை தினமும் கூறுவதுண்டு. நான் அன்பாக இருப்பதற்காக எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டு வருகிறேன். ஆனால் எனக்கு தற்போது ஏற்பட்டுள்ள அதீதமான பயம், யாரோ என்னைப் பின்தொடர்வது போன்ற உணர்வு, என்னுடைய பின் மண்டையில் யாரோ கைவைப்பது போன்ற உணர்வுகளால், எனக்கு மனநிலை பாதிக்கப்பட்டுவிட்டதோ என்ற பய உணர்வு ஏற்படுகின்றது. நான் எப்படி இதிலிருந்து மீண்டு இயல்பு நிலைக்குத் திரும்புவது? விளக்கம் தேவை.

பதில் : ஒரு பெண்மணி எப்போதும் எல்லோரிடமும் அன்பாக இருக்கவேண்டும் என்பதற்காக எல்லாவிதமான பக்தி முயற்சிகளையும் மேற்கொண்டார். அவர் தினமும் காலையில் குளித்துவிட்டு இரண்டு விளக்குகளை ஏற்றுவது வழக்கம். ஒன்று சாய்பாபாவிற்கு, மற்றொன்று எல்லா சாமிகளுக்கும் என விளக்கை ஏற்றி வைத்துவிட்டு, பத்மாசனத்தில் அமர்ந்துகொண்டு 1 மணிநேரத்திற்குக் குறையாமல் எல்லா சாமிகளுக்கான இறை நாமங்களைக் கூறுவது, மந்திர ஜபம் செய்வது வழக்கம். இந்தக் கடமைகளை முடித்த பிறகுதான் காலை உணவு சாப்பிடுவது, பிறகு தன்னுடைய கடமைகளை எல்லாம் செய்துவிட்டு மதியம் வள்ளலார் புத்தகம், ஆன்மிக புத்தகம் என படிப்பது உண்டு. திரும்பவும் மாலை அதேபோல் இரண்டு விளக்கை ஏற்றிவிட்டு 15 நிமிடம் மந்திர ஜபம் செய்வது, மேலும் இரவு உணவுக்குப் பின்பு ஆன்மிக நூல்களைப் படித்துவிட்டு உறங்கச்செல்வது என இவை அனைத்தையும் தினசரி வழக்கமாகக் கொண்டிருந்தார்.

வள்ளலார் புத்தகத்தைப் படித்ததில் “நானும் உங்களைப் போல் மனிதர்களாக இருந்து தான் இந்த உயர்ந்த நிலைக்கு வந்திருக்கிறேன். நீங்களும் முயன்றால் இந்த நிலையை அடையமுடியும். அதற்கு மாமிசத்தைத் தவிர்த்து எப்போதும் இறைவனை நினைக்கவேண்டும்” என்று வள்ளலார் கூறியதைப் படிக்கிறார். நாமும் கடைபிடித்து எப்படியாவது அன்புமயமாக மாறவேண்டும் என்று முயற்சிகளை மேற்கொண்டார்.

தொலைக்காட்சி பார்ப்பது போன்ற எந்த பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளாமல் இருக்கின்ற நேரம் முழுவதும் இறை நாமங்களைக் கூறுவது, ஆன்மிக புத்தகங்களைப் படிப்பது என தன்னுடைய நேரத்தை முழுவதுமாக பயன்படுத்தினார். மாமிசம் சாப்பிடுவதையும் தவிர்த்துவிட்டார்.

சில நாட்களாக வள்ளலாரின் புத்தகத்தைப் படித்துவிட்டு தூங்குவது வழக்கம். வள்ளலாரே அருகில் அமர்ந்து இருந்து தன்னை அடுத்த அடுத்த நிலைக்கு அழைத்துச் செல்வதாக நினைத்துக்கொள்வார். இப்படி ஒரு நாள் இரவு சூனியத்தைப் பற்றி படித்துவிட்டு உறங்கும்போது மனம் ஆழ்ந்த அமைதிக்கு சென்றுவிடுகிறது. அதீதமான இருட்டு ஏற்பட்டு தன் உடல் எதுவும் தனக்கே தெரியாமல், வாய்விட்டு கத்தத் தொடங்குகிறார். ஆனால் வாய்மட்டும் தான் அசைகிறதே தவிர சப்தம் எதுவும் வெளிவரவில்லை. ஒரு வழியாக தட்டுத்தடுமாறி கொஞ்ச நேரத்தில் விழித்துக்கொள்கிறார். உடல்முழுவதும் வியர்த்துக்கொட்டுகிறது, நெஞ்சு படபட என அடித்துக்கொள்கிறது, மேல்மூச்சு, கீழ்மூச்சு வாங்குகிறது. மெல்ல எழுந்து கொஞ்சம் தண்ணீர் குடித்துவிட்டு, கொஞ்சம் நடந்துவிட்டு படுக்கையில் திரும்பப் படுக்கவே பயப்படுகிறார். இதன் பிறகு மந்திரம், இறைநாமம் கூறும்போது யாரோ பின்னால் தொடுவது போன்ற உணர்வு, தலையின் பின்பகுதியில் யாரோ கை வைப்பது போன்ற உணர்வு என அடிக்கடி ஏற்படுகிறது.

இரவில் தோன்றிய அதீத இருட்டு, பய உணர்வு 3,4 முறை தோன்றியுமிருக்கிறது. தான் மனநிலை பாதிக்கப்பட்டு, பைத்தியம் பிடித்துவிட்டதாக நினைத்துக்கொள்கிறார். பிறகு இறைவனிடம் எப்படியாவது என்னை இந்த மனநிலையில் இருந்து காப்பாற்று என்று கதறுகிறார்.

இந்நிலையில் பகவத் ஐயாவின் "ஞானமலர்வு" புத்தகத்தை அந்தப் பெண்மணியின் நண்பர் ஒருவர் கொடுத்து படித்துப்பாருங்கள் என்று கூறுகிறார். அந்தப் பெண்மணியும் படித்து ஓர் அளவுக்கு தெளிவிற்கு வருகிறார். ஆனால் முழுவதுமாக தெளிவு கிடைக்கவில்லை. அதனால் போனில் தொடர்பு கொண்டு, தான் கடந்து வந்த நிலையைக் கூறி மனநிலை தெளிவு பெற என்ன செய்வது எனக்கேட்டார்.

அந்தப் பெண்மணிக்கு பின்வருமாறு விளக்கம் கொடுக்கப்பட்டது. இன்றிலிருந்து சாமி கும்பிடவேண்டாம். மந்திரங்கள் ஜெபிக்கவேண்டாம், விளக்குகளை ஏற்ற வேண்டாம். இவையெல்லாம் கொஞ்ச நாட்களுக்கு மட்டும் தவிர்த்துவிடுங்கள் என கூறிவிட்டு நம்முடைய பழைய உதாரணமான ஒரு கண்ணாடி கிளாஸ், ஒரு ஸ்பூன், கொஞ்சம் மணல், கொஞ்சம் தண்ணீர் எடுத்துக்கொண்டு கண்ணாடி கிளாஸில் 80% தண்ணீர் ஊற்றி மணல் போட்டு ஸ்பூன்விட்டு நன்றாக கலக்குங்கள் எனக் கூறினேன். அவரும் அப்படியே செய்தார். "ஸ்பூனால் தண்ணீரைக் கலக்குவது தண்ணீர் தெளிவதற்கு என நினைத்துக்கொண்டு தொடர்ந்து கலக்கிகொண்டே இருக்கிறார்கள். அதாவது மனதில் எப்போதும் அன்பாக இருக்கவேண்டும் என்பதற்காக தொடர்ந்து மந்திர ஜபம், இறைநாமம், ஆன்மிக புத்தகம் என தொடர்ந்து முயற்சிசெய்து கொண்டே இருக்கிறார்கள். அதுபோல் தங்கள் மனதை தொடர்ந்து அன்புக்காக கலக்கிக்கொண்டே இருக்கிறார்கள்" என்று கூறி, பிறகு “தண்ணீர் தெளிவதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்?” என்றேன்.

"என்ன செய்வது?" என்றார். "ஸ்பூனிலிருந்து கையை மட்டும் எடுத்துக்கொண்டால் போதும். ஸ்பூன் ஓரமாக நின்றுவிடும். தண்ணீர் சுழல்வது மெல்ல மெல்ல குறைந்துவிடும். பிறகு மணல் கிளாசின் அடியில் படிந்துவிடும். தண்ணீர் தானாகவே தெளிந்துவிடும்.

அதுபோல் எப்போதும் எல்லோரிடமும் அன்பாக இருக்கவேண்டும் என்பதற்காக நீங்களாக எடுத்த முயற்சிகள் அனைத்தையும் விட்டுவிட்டு மனதை அதன் போக்கில் செயல்பட அனுமதித்து நாமாக செயல்படக்கூடிய புற விசயத்தில் மட்டும் முழு கவனத்தையும் செலுத்தினால் போதும். நாளடைவில் தண்ணீர் தெளிவதைப்போல், மனதில் அன்பும் அமைதியும் தாமாக ஏற்படும்" என்று கூறியவுடன் அந்த பெண்மணியும் அந்தச் செயல்பாட்டை ஏற்றுக்கொண்டார்.

அடுத்த நாள் போனில்தொடர்பு கொண்டு எப்படி இருக்கிறீர்கள் என்று கேட்டப்போது 80% நன்றாக இருப்பதாகக் கூறினார். "ஆனால் எனக்கே தெரியாமல் மந்திரம் ஜெபித்துவிடுகிறேன். புத்தகம் படித்துவிடுகிறேன்" என்றார். "உங்களுக்கு தெரியாமல் மந்திரம் ஜெபிப்பதாலோ, புத்தகம் படித்தாலோ தவறு எதுவும் கிடையாது. எப்போது நாம் தான் புத்தகம் படிக்கிறோம், மந்திரம் ஜெபிக்கிறோம் என்பது உங்களுக்கே தெரிகிறதோ அப்போது நிறுத்தினால் போதும்" என்று கூறினேன்.

"மனதில் மற்றவர்கள் மீது ஏற்படும் கோபம், வெறுப்பு போன்ற உணர்வுகளை வெளிக்காட்ட மிகவும் வருத்தமாக இருக்கிறது. அதனால் அவர்களிடம் காட்டாமல் கட்டுப்படுத்திக்கொண்டு பிறகு நான் மட்டும் தனிமையில் இருக்கும்போது மனம் வெம்பித் தவிக்கிறது" என்று கூறினார்.

"நடைமுறை யதார்த்த வாழ்வில் மற்றவர்கள் மீது உங்களுக்கு ஏற்படும் கோபம், வெறுப்பு போன்ற உணர்வுகளை நீங்களாக உருவாக்கிய அன்புமயமான மனதால் எதிர்கொள்ள முடியவில்லை. நீங்களாக உருவாக்கிய அன்புமயமான மனம் பாதிக்கப்படுவதையும் உங்களால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அப்படி பாதிக்கப்படுவதை நீங்களே பாதித்ததாக உணர்கிறீர்கள்....

ஒரு ZOO வில் பல்வேறு கொடிய மிருகங்கள் தனித்தனி கூண்டில் அடைக்கப்பட்டு உள்ளன. அவை ஒவ்வொன்றும் சதா கத்திக்கொண்டே இருக்கும். இதன் பொருள் என்ன என்றால், தான் சுதந்திரமாக இருக்கவேண்டும், அதற்கு இந்த கூண்டு தடையாக உள்ளது என்பதை வெளிப்படுத்துகிறது. ZOO வில் இருக்கும் எல்லாக் கூண்டுகளையும் திறந்துவிட்டால் அதன் இருப்பிடமான காட்டிற்கு சென்று சுதந்திரமாக வாழும்....

அதுபோல் நமது மனதில் வெளிக்காட்டமுடியாத பல்வேறு வகையான உணர்வுகள் நமது இயல்புக்கு தகுந்தாற்போல் உள்ளன. உண்மையில் அவை நம்மை விட்டு வெளியேறவே எப்போதும் துடிக்கின்றன. ஆனால் நம்முடைய அன்புமயமான மனம் வேண்டாத உணர்வுகளை "வெளியே வராதே, வராதே" என மனதிலே அடக்கிவைக்கிறது. இதனால் அந்த வேண்டாத உணர்வு மேலும் வலுப்பெறுகிறது. நம் மனதிலிருந்து எல்லா உணர்வுகளும் வெளியேற விட்டுவிட்டால் கொடிய மிருகங்கள் காட்டை நோக்கி ஓடுவது போல் அந்த உணர்வுகளும் நம்மை விட்டு ஓடிவிடும். பிறகு அன்பு என்பது தாமாக ஏற்பட்டுவிடும்" என்று கூறப்பட்டது.

அடுத்த 5 நாட்கள் கழித்து தொடர்பு கொண்டபோது, தான் நல்ல முன்னேற்றத்துடன் இருப்பதாகவும், தான் அமைதியாக இருப்பதை தானே உணர்வதாகவும் கூறினார். எப்போதாவது பயம் ஏற்படும்போது கண்ணாடி கிளாஸை பார்ப்பதால் பயத்தை எதிர்த்து எதுவும் செய்ய முடியாது என அப்படியே விட்டுவிடுவதால் பயம் தானாகவே நீங்குகிறது என்றார். ஏதாவது வேண்டாத உணர்வு ஏற்பட்டது அவருக்கே தெரியும்போது நம்மிடம் இருந்து கொடிய மிருகம் வெளியேறுகிறது என அமைதி அடைவதாகவும் கூறினார் அந்தப் பெண்மணி.

"அன்பு என்பது தாமாக ஏற்படுவது ;
நாமாக அன்பை ஒருபோதும் உருவாக்கமுடியாது"

V.A.P. சரவணன், சேலம்.
செல் : 99942-05880

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்....

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் தன் ஆன்மிகப் பணியை திருவண்ணாமலையில் நிறைவு செய்து சென்னை வந்து சேர்ந்தார்.

சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் 16-3-2014 மற்றும் 22-3-2014 ஆகிய இரு நாட்களிலும் பகவத் ஐயாவின் சிறப்புரை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மேலும் 23-3-2014 அன்று அங்கேயே ஒருநாள் ஞானமுகாம் நிகழ்ச்சியும் நடைபெற்றது. இதனை ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம் ஏற்பாடு செய்திருந்தது. இந்நிகழ்ச்சிகளில் பல புதிய அன்பர்கள் கலந்துகொண்டு பயனடைந்தனர். ஐயாவின் கருத்துகளை அனைவரிடமும் எடுத்துச்செல்வதில் சென்னை மையத்தின் செயல்பாடுகள் மிகவும் சிறப்பாக உள்ளன. நம் அனைவரின் சார்பிலும் அவர்களுக்கு நன்றியை தெரிவித்துக்கொள்வோம்.

மேலும் ஏப்ரல் மாதத்தில் இராஜபாளையத்திலும் மே மாதத்தில் சேலம் ஏற்காடு மலைப்பிரதேசத்திலும் 3 நாள் ஞானமுகாம் நடைபெற உள்ளன. ஐயாவுடன் ஞான முகாமில் கலந்து கொண்டு ஞானத் தெளிவில் உறுதிபெற்று விடுதலை அடைவோரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருவது நமக்கு மகிழ்ச்சியைத் தரக்கூடிய தகவலாக இருக்கிறது.

அதுபோல் நமது பகவத் பாதையில் பயணிப்போரின் எண்ணிக்கையும் நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே வருகிறது. பிப்ரவரி மாத இதழில் வெளிவந்த "வெறுமையும் வேலையும்" என்ற உரையாடல் பலருக்கு நல்லதெளிவைக் கொடுத்ததாக கடிதம் மூலமாகவும் தொலைபேசி மூலமாகவும் தங்களது மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்திருக்கிறார்கள். மேலும் நமது பாதை முழுமையான ஞானத்தெளிவை வழங்கக்கூடிய ஒரு மாத இதழாக இருப்பதாக பலரும் பாராட்டி வருகிறார்கள். பயனடைந்தவர்கள், தம்மைப் போன்ற ஞானத்தேடுதல் உள்ளவர்கள், நண்பர்கள், உறவினர்கள் என இந்த இதழால் பயனடைவார்கள் என கருதுபவர்களுக்கு இப்பாதையைப் பற்றி தெரிவித்து அவர்களும் பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம். மேலும் நண்பர்கள் மற்றும் உறவினர்களுக்கு அவர்களுக்கு பிறந்தநாள் மற்றும் திருமணநாள் பரிசு வழங்குவதற்குப் பதிலாக அவர்களுக்கான சந்தாவைச் செலுத்தி இந்த பகவத்பாதையைப் பரிசாக வழங்கி பயன்பெறச் செய்யலாம் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும் இதுவரை சந்தா வழங்காதவர்கள் சந்தாவை செலுத்தியும் சந்தாவை புதுப்பிக்காதவர்கள் புதுப்பித்தோ அல்லது ஆயுள் சந்தாவாக மாற்றியோ இந்த பகவத் பாதை இதழ் மேலும் சிறப்பாக வெளிவர உதவுமாறு அனைவரையும் கேட்டுக்கொள்கிறேன்.

அன்புடன், K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555

## ஏற்காடு ஞானமுகாம்

கோடை வெயிலுக்கு இதமாக ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் சேலம் ஏற்காட்டில் மே மாதம் 23, 24 மற்றும் 25 ஆகிய மூன்று நாட்கள் ஞான முகாம் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இது கோடை வெப்பத்தின் தாக்கத்தை தவிர்க்க இயற்கைச் சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் அமைந்துள்ள House of Peace - என்ற அமைதி இல்லத்தில் நடைபெற ஏற்பாடு செய்துள்ளோம்.

குளுமையான ஏற்காட்டில் ஸ்ரீ பகவத் ஐயாவுடன் தங்கியிருந்து ஞானத்தெளிவு பெற இது ஒரு சிறந்த வாய்ப்பு. ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் குறைந்த எண்ணிக்கையில் இருப்பதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.14 வயது பூர்த்தியானவர்கள் மட்டுமே பங்கு பெறலாம்.

நாள் : 23-5-2014 வெள்ளிக்கிழமை மதியம் 3-00 மணிமுதல்
25-5-2014 ஞாயிற்றுக்கிழமை மாலை 3-00 மணிவரை

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.

உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ.1500/- மட்டும்.

75 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் ஏப்ரல் மாதம் 30-ம் தேதிக்குள் முழுப் பணத்தையும் செலுத்தி பதிவு செய்திட வேண்டுகிறோம். தற்போது முன்பதிவு நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. கலந்துகொள்ள ஆர்வமுள்ளவர்கள் கீழ்கண்ட ஏதேனும் ஒரு வழியில் தொகையைச் செலுத்தி முன்பதிவு செய்து தங்கள் பெயர், முகவரி மற்றும் தொலைபேசி எண் ஆகிய தகவலை தெரிவிக்க வேண்டுகிறோம்.

பணத்தைச் செலுத்தும் முறை

1. www.pravaagam.org/event (or) www.pravaagam.org என்ற website-ல் Credit Card (or) Debit Card மூலம் செலுத்தலாம்.

2) மணி ஆர்டரை ஸ்ரீ பகவத் மிஷன், 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003 என்ற முகவரிக்கு அனுப்பலாம்.

3) வரை ஓலை (D.D) அல்லது செக் (Cheque) அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லதக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

5) நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC Bank A/C No : 15907620000075
NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

மேலும் விபரங்களுக்கு : 9994205880, 9789165555, 9443290559

அனைவரும் வருக! தெளிவு பெறுக!

## இராஜபாளையத்தில் ஞானமுகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் இராஜபாளையம் அரவிந்த் ஹெல்த் சென்டரில் ஞானமுகாம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதனை இராஜபாளையம் அரவிந்த் ஹெர்பல் லேப் - நிறுவனத்தார் இலவசமாக நடத்தித் தருகிறார்கள். அன்பர்கள் வழங்கும் பங்களிப்பை பகவத் மிஷனுக்கே நன்கொடையாக வழங்க முடிவு செய்துள்ளார்கள். இங்கு 80 பேர் தங்கி பயன்பெறுவதற்கான வசதி உள்ளது. ஸ்ரீ பகவத் ஐயாவுடன் 3 நாட்கள் தங்கியிருந்து ஞானத்தெளிவு பெறுவதற்கு இது சரியான தருணம். இந்த ஞானமுகாமில் கலந்துகொண்டு பயன்பெற விரும்புபவர்கள் முன்பதிவு செய்துகொள்வது அவசியம். முன்பதிவு செய்தவர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். இந்த அரிய வாய்ப்பை அனைவரும் பயன்படுத்திக்கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

முன்பதிவிற்கு Rajapalayam Gnana Muhaam பெயர், ஊர் மற்றும் Cell No. Type செய்து கீழ்கண்ட எண்ணிற்கு SMS அனுப்பவும். அல்லது நேரடியாக தொடர்பு கொண்டு தெரிவிக்கவும். செல் : 9994205880, 9789165555.

முன்பதிவிற்கு இறுதி நாள் : 7-4-2014

ஞானமுகாம் நடைபெறும் இடம் : அர்விந்த் ஹெல்த் சென்டர்/ அர்விந்த் ஹெர்பல் லேப் (பி) லிமிடெட்.
140, முடங்கியர் ரோடு, 4-வது Km , இராஜபாளையம்-626 117.

நாள் : 12-4-2014 மாலை 4-00 மணி முதல் 14-4-2014 மாலை 4-00 மணி வரை

அனுமதி இலவசம்! முன்பதிவு அவசியம்!

மேலும் விபரங்களுக்கு : செல் : 9994205880, 9789165555.

## பகவத் ஐயாவை நேரில் சந்திக்க விரும்புபவர்களுக்கு

1-4-2014 முதல் 7-5-2014 வரை திருச்செந்தூர்

9-5-2014 முதல் 22-5-2014 வரை சென்னை ஸ்ரீபகவத் மிஷன் மையம்

தொடர்புக்கு : 9944215677

## ஜென்கதை "சுமக்காதே!"

ஒரு ஜென்குரு இருந்தார்.

அவர் தன் பயணம் முடிந்து தமது குடிலை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். அவருடன் அவரது சீடனும் நடந்து கொண்டிருந்தான்.

அவர்கள் சென்ற வழியில் ஓர் ஆறு குறுக்கிட்டது. அது ஒரு காட்டாறு. அதில் திடீர் திடீரென வெள்ளம் பெருகி ஓடும். சிறிது நேரத்தில் அந்த வெள்ளம் வடிந்து விடும்.

குரு அந்த ஆற்றில் இறங்கி நடந்தார். அவருக்குச் சற்றுத்தூரத்தில் ஓர் இளம்பெண் நடந்து போய்க்கொண்டிருந்தாள். அப்போது திடீரென ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுக்க ஆரம்பித்தது. கிடு கிடுவென நீர்மட்டம் கழுத்துவரை உயர்ந்தது. அந்த இளம்பெண் வெள்ளத்தைச் சமாளிக்க முடியாமல் திக்குமுக்காடினாள்.

சட்டென்று அவளை நெருங்கிய குரு தனது இரு கைகளாலும் அந்த பெண்ணை அப்படியே தூக்கினார். பிறகு தன் தலையில் சுமந்து அவளைத் தூக்கியபடியே ஆற்றைக் கடந்தார். மறுகரையை அடைந்ததும் அவளைக் கீழே இறக்கிவிட்டு விட்டு மேலே நடக்க ஆரம்பித்தார்.

கூடவே வந்த சீடனுக்கோ பகீர் என்றிருந்தது. "ஐயோ! என்ன அநியாயம் இது. நம் குரு ஒரு கன்னிப் பெண்ணைத் தொட்டுத் தூக்கிவிட்டாரே!" என்று மனதுள் எண்ணி எண்ணி அதிர்ச்சியடைந்தான் அவன். அவனால் குருவின் செயலை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்றாலும் குருவைக் கேள்வி கேட்கத் தயங்கியவனாய் மவுனமாயிருந்தான்.

சீடன் ஏதோ கேட்க நினைப்பதையும், பிறகு மவுனமாவதையும் கண்ட குரு, அவன் மனதில் ஏதோ சந்தேகம் இருப்பதைப் புரிந்துகொண்டார். ஆனாலும், அவனாக வாய்விட்டுக் கேட்கட்டும் என்று மவுனமாயிருந்தார்.

'குரு எப்படி ஒரு கன்னிபெண்ணை தொட்டுத் தூக்கலாம்? இது சரியல்லவே, இப்படி செய்து விட்டாரே' என சீடன் மனதுக்குள் அமைதியின்றி போராடிக்கொண்டிருந்தான். அவர் மீது உள்ள கோபத்தை மனதிலேயே இறுக்கமாகப் பூட்டி வைத்துக்கொண்டான். ஒரு வாரம் சென்றது. சீடனின் தவிப்பைக் கண்டு பொறுக்க மாட்டாதவராய்க் கடைசியில் குரு சீடனிடம் கேட்டார்.

"உன் மனதை ஏதோ ஒரு பிரச்சனை அரித்தெடுக்கிறது போல் இருக்கிறதே" என்று.

"ஆம் குருவே!" என்றான் சீடன் சிறிது தயக்கத்துடன்.

"என்ன பிரச்சினை? தயங்காமல் கேள்" என்றார் அவர்.

முதலில் தயங்கிய சீடன் கடைசியில் சற்றுத் துணிச்சல் பெற்றவனாகக் கேட்டான்,

"குருவே! ஒரு வாரத்திற்கு முன்பு நிகழ்ந்த சம்பவம்....?"

சீடன் இழுத்தாற்போல் கேட்கவும் வியப்படைந்த குரு, "ஒரு வாரத்திற்கு முன்பு என்ன? என்ன ... நடந்தது?" என்று கேட்டார் வியப்புடன்.

"தாங்கள் ஓர் இளம் பெண்ணைத் தங்கள் கைகளால் தொட்டுத் தூக்கினீர்களே!" என்று நெளிந்தான் சீடன் சங்கடத்துடன்.

இதைக் கேட்ட குரு கடகடவென்று சிரித்தார்.

பின்னர், "அட முட்டாளே! அவளை நான் அங்கேயே அப்போதே இறக்கி விட்டுவிட்டேனே! நீ இன்னுமா அவளைச் சுமந்து கொண்டு திரிகிறாய்!" என்றார்.

சீடன் இந்தப் பதிலால் வாயடைத்துப் போனான்.

"முடிந்தது முடிந்ததுதான்; நடந்தது நடந்ததுதான்".





**Book packet** containing printed books
**Periodical**

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

## சத்சங்கம்

சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் ஒவ்வொரு வாரமும் ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணி முதல் 7-00 மணிவரை ஐயாவின் கருத்துக்களில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் கூடி சத்சங்கம் நடைபெற்றுக்கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்துகொண்டு பயனடைய அழைக்கிறோம்.

இப்படிக்கு
ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்
தொடர்புக்கு :
9884097438, 9381019473, 9444756744

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555